ஞுண்டு. நோயுண் டுதங்க ளுருண்டு நோய்கட் கெல்லாந் தாயான, சாய மூன்று கைதொழவேண்டினரு முண்டு கற்பத்தே, மாயுந் தன்மை யுண்டானால் வானோர்க் கென்னை யுளதுண்டே." ஆனந்தத் திரட்டு. "தேவின்மா னுடத்திற் றுன்பந் திகழ்வதிப் பரிசே யென்று, வாவகீழ் விலங்கு பக்ஷி யாதிதா வரமற் றெல்லா, மேவிய துன்ப வெள்ளத் துழைத்தலோ ரளவு முண்டோ, பாவமா நிரயத் தன்னிற் படுதுயர் பகரல் வேண்டா." மற்றும் வருவன வற்றுற் காண்க. (10)

[ இங்ஙனம் கூறிய உபதேச மொழிகளை அர்த்த அங்கீகார மாக உட் கொண்டு பிரபஞ்சத்தில் மிகவும் உவர்ப்புப் பிறவாமல் நின்ற மநத்தைப் பார்த்து மேற் கூறுகின்றது.]

11. அன்றே னக்குநீ யொருதுணை பிறப்பிறப் பதிற்றுய ரமுங்கேடுந், தின்ற லொன்றலால் வியாதியா திகளினுற் செறிதுய ரமுமோர்ந் தோர்ந், தென்று மேழ்பவக் கஞ்சிலை நெஞ்சமே யின்பவீ டேதுவென்றே, நின்று நின்றழு திலை தொழு திலைசிவ னேசர்தாள் பூசித்தே.

(பத உரை) எனக்கு — (பிறப்புத் துன்பம் என்றும், வீடு இன்பம் என்றும், உனக்கு நாநா உபாயங்களினாலும், யான் அறிவித்தும், நீ அப் பிறப்பினை நீக்கி, வீட்டினை அடைதற்கு ஏது வாய தவத்தினை விரைந்து செய்யாது, தாமசம் பண்ணு கின்றனை யாகலின்,) எனக்கு, ஒரு—ஒப் பற்ற, துணை—துணை, நீ அன்று—நீ அன்று (என்ற விவேகம் கூற, அதற்கு, நீர் விடுக்கச் சொன்ன பற்றுக்கள் யாவும் விடுத்தேன். தவமும் செய்கின்றேன். நீர் இன்னும் கூறிய வாறும் கேட்க நிற்கின்றேன். இங்ஙனம் இருந்த என்னை அங்ஙனம் கூறியது என்னை என்று மநம் கேட்ப,), பிறப்பு—பிறப்பில் (கருப்பாசயப் பை உறுத்துதல் முதலிய ஜந்தி னால் வருகின்ற துன்பத்தையும்), இறப்பதில்—இறப்பில் (அத்

துன்பத்தின் எண் மடங் காகிய,) துயரமும் — துன்பத்தோடு, கேடும்—(வருகிற) நாசத்தையும், தின்றல்—(இவற்றிற் கிடையா புள்ள நிதிக்கண்) அருந்தல், ஒன்றலால்—பொருந்தல்களாலும், வியாதி — நோய், ஆதிகளினால் — முதலியவற்றாலும், செறி — அடையாநின்ற, துயரமும்—துன்பங்களையும், என்றும்—(இடை விடாது) எக் காலமும், ஓர்ந்து—ஓர்ந்து—ஆராய்து (ஆராய்ந்து), ஏழ்—(அவ்) வேழு வகை, பவக்கு—பிறப்பிற்கும், நெஞ்சமே—நெஞ்சமே, அஞ்சிலை—(நீ) பயந்தா யில்லை, சிவன்—(அஃது அன்றி அப் பிறப்புத் துன்பங்களை நீக்குதல் செய்யும்) சிவனது, நேசர்—(திரு வடிக்கு) நேய ராகிய அடியாரின், தாள்—திரு வடிகளை, பூசித்து—அருச்சித்து, தொழு திலை—வணங்கினை யில்லை, இன்ப—இன்ப, வீடு—வீ டாவது, ஏது—யாது, என்று—என்று, நின்று—(அவர்களைக் கேட்டு) நின்று, நின்று—நின்று, அழு திலை—அழுதா யில்லை (ஆகலின், யாம் கூறிய வாறு நீ கேட்டது என்னை என்று விவேகம் கூறிற்று.) எ-று.

கருப்பாசயப் பை புறுத்துதல முதலியன:— 1. கருப்ப ஆசயப் பை உறுத்துதல். 2. அதில் ஜலம் பூரித்தல். 3. உதர அக்கினியால் வேகுதல் 4. பிரசூத வாயு முறுத்துத் தள்ளுதல். 5. யோனித் துவாரத்தில் நெருக் குண்டல் என்னும் இவை.

[illegible] - இவை யிரண்டும் உம்மைத் தொகைகள். இறப்பதில் - அது - பகுதிப் பொருள் விகுதி. இல் - ஏழ னுருபு. துயரமுங் கேடும் - உம் - இரண்டும் எண்ணுப் பொருளன. ஒன்றலால், ஆதிகளினால் - இவற்றி னிறுதியின் எண்ணும்மைகள் தொக்கன. துயரமும் - உம் - இறந்தது தழீஇய வெச்சம். ஓர்ந்து ஓர்ந்து, நின்று நின்று - இவ் வடுக்குக ளிரண்டும் தொழிற் பயில்வுப் பொருளன. ஏழ் - 'ஏழு' என்னு மெண்ணுப் பெயரின் விகாரம். என்றும் - உம் - முற்று. பவக்கு - 'பவத்துக்கு' என்பதன் விகாரம். நெஞ்சமே - விளி. என்றே - ஏ - அசை நிலை. பூசித்தே - ஏ - ஈற்றசை.

(சிந்-ரை) அன் றெனக்கு நீ யொரு துணை எ-நு,— பிறப்புத் துன்ப மென்றும் வீடு இன்ப மென்றும் உரைக்கு நானா வுபாயங் களினாலும் யாம் அறிவித்தும் நீ அப் பிறப்பினை நீக்கி வீட்டினை அடைதற்கு ஏது வாய தவத்தினை விரைந்து செய்யாது தாமசம் பண்ணுகின்றனை யாகலின் எனக்கு நீ ஒப்பற்ற துணை யன் றென்று விவேகங் கூற, அதற்கு நீர் விடுக்கச் சொன்ன பற்றுக்கள் யாவும் விடுத்தேன், தவமுஞ் செய்கின்றேன், நீர் இன்னுங் கூறிய வாறுங் கேட்க நிற்கின்றேன், இங்ஙனம் இருந்த என்னை அங்ஙனங் கூறியது என்னை யென்று மனங் கேட்ப,

பிறப் பிறப்பதிற் றுயரமுங் கேடுந் தின்ற வொன்றலால் வியாதியாதிகளினால் செறி துயரமு மோர்ந் தோர்ந் தென்று மேழ் பவக் கஞ்சிலை நெஞ்சமே எ-து,— பிறப்பிற் கருப்பாசயப் பை உறுத்தல் முதலிய வைகளினால் வருகின்ற துன்பத்தையும், இறப் பில் அத் துன்பத்தி னெண் மடங் காகிய துன்பத்தோடு வருகிற நாசத்தையும், இவற்றிற்கு இடையா யுள்ள ஸ்திதிக்கண் அருந்தல் பொருந்தல்களாலும் நோய் முதலியவற்றாலும் அடையாநின்ற துன்பங்களையும் இடைவிடாது எக் காலமும் ஆராய்ந்து அவ் வெழு வகைப் பிறப்பிற்கும் நெஞ்சமே நீ பயந்தா யில்லை,

இன்ப வீ டெது வென்றே நின்று நின் றழு திலை தொழு திலை சிவ னேசர் தாள் பூசித்தே எ-து,— அஃதன்றி அப் பிறப்புத துன்பங்களை நீக்குதல் செய்யுஞ் சிவனது திரு வடிக்கு நேய ராகிய அடியாரது திரு வடிகளை அருச்சித்து வணங்கினை யில்லை, இன்ப வீ டாவது யா தென்று அவர்களைக் கேட்டு நின்று நின்று அழுதா யில்லை, ஆகலின், யாம் கூறிய வாறு நீ கேட்டது என்னை யென்று விவேகங் கூறிற்று, எ-று.

“வியாதிகளினாற் செறிதுயரம்” என்றமையால் அருந்தல் பொருந்தற்கு ஏது வாகிய திரவியந் தேடுதல் அதனைப் பாதுகாத்தல்

பாரக் கொள்ளின் - கா - பகுதி. க் - எழுத்துப் பேறு. இல் - சாரியை. ஆய் - முன்னிலை யேவல் விகுதி யாகக் கோடல் நேரும். ஈறு வலித்து கொள்ளச் சாரியை பெரிய தன்று. கெடுவாயே - ஏ - ஈற்றசை.

(சீத-ரை) பூசை செய்து தோத்திரஞ் சொலித் தவனை நினை யன்னியப்பா லன்னவாற காசை செய்திடு மட்டலக் கூத்தனை யடைகிலே எ-து,—அவனது திருவடியைக் காயத்தால் அருச்சித்து வணங்கி வாக்கால் தோத்திரம் பண்ணி மனத்தால் தியானித்து இங்ஙனம் வழிபடும் பத்தி புண்ணியங்களை யுடைய அடியாரிடத்து எழுந்தருளுதற்குத் திருவுளத்து இச்சை செய்யாநின்ற ககன சபைக்கண் நடம் புரிவோனை மனமொழி மெய்களால் வணங்கி அடைந்தா யில்லை,

அடைந்தாரிற் பேசுகின்றனை யறவரின் விளங்கினை பிறர் மனை நயக்கின்றாய் எ-து,—அவனது திருவடியை யடைந்த அடியார் போல் வார்த்தை மாத்திரஞ் சொல்லுகின்றனை, பசு புலித் தோல் போர்த்தது போல் உள்ளத்தில் வஞ்சகம் வைத்துக் கொண்டு புறத்துத் துறவறத்தார் போல் அவரது வேடத்தால் விளங்காநின்றனை, எனக்கு உரிய மனைவியைத் துறந்து தவஞ் செய்கின்றே னென்று தொடங்கிப் பிறர்க் குரிய மனைவியை இச்சிக்கின் றாய்.

சிசி யிங் கிருந் தென் செய்தாய் நெஞ்சமே செத்திலாய் கெடு வாயே எ-து,— சிசி முன் னிருந்த இல்லறமு மன்றி அதனை விட்டுப் பின்னர் அடைந்த துறவறமு மன்றி நடுவ னின்று கூடா வொழுக்கஞ் செய்கின்றனை, நெஞ்சமே நீ இவ் விடத்தில் இருந்து என்ன காரியஞ் செய்துகொண்டனை, இனி நீ இருந்தால் இக் கூடா வொழுக்கத்தால் என்னைப் பவத் துன்பத்திலே தள்ளுவா யாகலின் நீ சாவாய் கெடுவாய் என்று விவேகங் கூறிற்று, எ-று.

(ஆகிய) [illegible] உபகோசாசாரம் குறித்த லின் [illegible] விட்டுத் [illegible] ஞானாசாரம் பற்றிய நின் றென்பது [illegible] அறிகின்றேன்), நெஞ்சே—நெஞ்சமே, நுவன் – இவ் விடத்து பட்டு—பற்றுவாய், கொள—கொள்ளுதற்காக, குங்குமம்—குங்குமப் பொதி, சுமந்து—தாங்கி, செல்—செல்கின்ற, கரம்—கர்த்தபம், உன்னில்—உன்னினும், ஈயது ஆம்—சிறுமை யாம் (என்று விவே கம் கூற, அதற்கு, பல நூல்களைக் கற்று அறிந்து பிறர்க்கு உபதேசிக்கச் சிவ பூசை தோத்திரம் பண்ண, இவற்றால் யாவரும் மதிப்ப இருந்த என்னை, அருக சண்டாளம் ஆகிய கர்த்தபத்திற் கும் கீழ்ப் படுத்திக் கூறினீர். இஃது என்னை என்று மனம் கேட்ப), அதற்கு—(அதற்கு, நீ மக்கள் யாக்கையைப் பெற்று நூற் பொருள் உணர்ந்தும், வீட் டின்ப மாய பயனைப் பெறாது, அப் பயன் பெற் றான் போல், நெஞ்சில் வஞ்சகம் வைத்துக் கொண்டு அந் நூற் பொருளைப் பிறர் பயன் கொளக் கூறுகின்றாய்.) அக் கர்த்தபத் திற்கு, மாலுடத்து—மக்களிடத்து, காயம்—ஆக்கையும், இன்று— இல்லை, அன்றி — அஃ தல்லாமலும், களவும் — (யான் சுமந்த குங்குமம் பிறர் பயன் கொளக் கொடுத்தேன் என்ற) வஞ்சமும், உள்—உள்ளத்து, இன்மையினால்—இன்றாகலின், (உன்னை அக னினும் கீழ்ப் படுத்திக் கூறியதால் தோஷம் என்னை என்று விவேகம் கூறிற்று.) எ-று.

(இ-பு) உணர்ந்தும், உரை செய்தும் - உம் - இரண்டும் உயர்வு சிறப்புப் பொருளன. அனுத் தினையாலும் - உம் - முற் றும்மை. நெஞ்சே - விளி. கொள - கொள்ள என்பதன் இடைக் குறை. செல்காம் - வினைத் தொகை. உன்னில் - இல் - எல்லைப் பொருள் தாய ஐந்த னுருபு. களவும் - உம் - இறந்தது தழீஇய எச்சம். இன்மையினாலே - ஏ - ஈற் றசை. உள் - உளம் என்பதன் விகாரம். குங்குமம் - ஆகு பெய ராய்ப் பொதியை யுணர்த்திற்று. காம் - களவு மின்மையினால் உளனிற் றாய தாம், எனக் கூட்டுக.

வாய்றுற் பல நூல் படித் தென்பதற்கு உதாரணம்: திருவள்ளுவ நாயனார். "ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத் துந் தானடங்காப், பேதையிற் பேதையா ரில்." (834) "பிறர் கொளக் குன்றுமன் சுமந்து செல்" என்பதற்கு உதாரணம்: அரிவாகந்த சித்தியார். "விரித்தகல் வேத புராணங்க ளாகம மிக்ககலை. தெரிந்து படித்துப் பொருள்செப்பித் தானிலை சேர்ந்திலனா, திருந்தசன் டானரி னேற்றங் கழுதை பெழிற்குங்குமம், பரிந்து சுமந்தும்பின் வஞ்சம் பண்ணுதப யனெழிலே." மற்றும் வருவனவற்றுங் காண்க. (13)

[ எல்லா ஞானசாத்திரங்களின் வஞ்சம் இருந்தமையால் நீர் இகழ்ந்து கூறினீர். பற்றுக்கள் யாவும் விடுத்த எனக்கு இது விடுதல் அரிதோ, இதனையும் விடுத்தேன். இனி ஒரு மார்க்கத்திலே நின்று தவத்தைப் பண்ணி வீட்டை அடைவதற்கு அறு வகைச் சமயங்களுள் ஒரு மேலாய சமயம் எனக்கு நீர் கூறுக என்று மநம் கேட்ப, அதற்கு, விவேகம் மேற் கூறுகின்றது. ]

**14. நாலு வேதமு மொருசம நிலைசொல நவைசெயீ ரவத்தைப்பாற், கோலு மூவிரு சமயமா கியபடு குழியினு டிழிகின்றாய், வேலை யாவுனக் குடறகு விதியுற வையுமதை விடுவிக்கும், கால னுர்தொடர் பையுமினங் தொடருதி போலு நீ கடைநெஞ்சே.**

(பத உரை) நாலு—(இருக்கு முதலிய) நான்கு, வேதமும்—வேதங்களும், ஒரு—ஒப்பற்ற, சம—(சகல கேவலங்களுக்கு மத்தியமாகிய) சுத்த, நிலை—அவஸ்தையே, சொல—(வீடு அடைதற்கு வது என்று) சொல்ல, நவை—(காமம் வெகுளி மயக்கம் என்னும் மூன்) குற்றங்களோடும், செய்—(உண்டாக்குதல்) செய்கின்ற, ஈர்—(சகல கேவலங்கள் என்கிற) இரண்டு, அவத்தை—அவஸ்தைகளின், பால்—பகுதி யாக, கோலும்—(சமயிகள் தங்கள் சித்த விகற்பத்தால்) கோலிய, மூ இரு—அறு வகை, சமயம் ஆகிய—மதம் ஆகிய,

-டு குழியினூடு—(பிறவிப்) படு குழியிலே, இழிகின்றாய்—(நீ) இறங்குகின்றாய் (என்று விவேகம் கூற, அதற்கு, இவ் வாறு சமயங்களையும் படு குழி என்றீர். இது என்னை என்று மனம் கேட்ப, அதற்கு, இங்ஙனம் கேட்டமையால், சமயங்களின் மேலே பற்றுக்கள் நீ இன்னம் விடுத்திலையாகலின்,), வேலை (ஆக)—(இதுவே) வேலையாக, உனக்கு—உனக்கு, உடல்—உடல், தரு—கொடுக்கின்ற, விதி—பிரமனது, உறவையும்—உறவினையும், அதை—(அவனாற் கொடுக்கப்பட்ட) உடலினை, விடுவிக்கும்—(விடுவித்தலே வேலையாக) விடுவிக்கிற, காலனார்—கூற்றனாது, தொடர்பையும்—கட்டினையும், இனம்—(எவ் வகைப் பட்ட பற்றுக்களையும் விடுத்துப் பிறப் பிறப்பை நீக்குவதற்கு ஏது வாய் வந்தும்) இன்னமும், நீ—நீ, தொடருதி—தொடர்கின்றனை, போலும்—போலும், கடை—(யாவைக்கும்) கீழாய, நெஞ்சே—நெஞ்சமே (என்று விவேகம் கூறிற்று) எ-று.

(இ-பு) வேதமும் - உம் - முற்று. ஒரு, ஈர், மூ விரு - இவை விகார வெண்ணுப் பெயர்கள். அவத்தைப்பால் - பால் - ஏழனுருபு, பகுதி என்னும் இடப் பொருள் குறித்தது. படு குழி, தரு விதி - இவை வினைத் தொகைகள். குழியினூடு - இன் - சாரியை. ஊடு - ஏழனுருபு. வேலையா - ஆ - ஆக என்பதன் கடைக் குறை. உறவையும், தொடர்பையும் - உம் - இரண்டும் எண்ணுப் பொருளன. விதி யுறவு, காலனார் தொடர்பு - இவை ஆறும் வேற்றுமைத் தொகைகள். இனம் - இன்னம் என்னும் கால வெல்லை குறிக்கு மிடைச் சொல்லின் இடைக் குறை. போலும் - ஒப்பில் போலி. நெஞ்சே - விளி.

(சீ-ரை) நாலு வேதமு மொரு சம நிலை சொல நவை செயீ ரவத்தைப்பாற் சேறு மூ விரு சமய மாகிய படுகுழியினூ டிழிகின்றாய் எ-து—இருக்கு முதலிய நான்கு வேதங்களும் சகல கேவலங்களுக்கு மத்திய மாகிய சுத்தாவஸ்தையே வீ டடைதற்கு ஏது

வென்று சொல்லுங் காம வெகுளி மயக்க மென்னு மூக் குற்றங்களை யும் உண்டாக்குதல் செய்கிற சகல கேவலங்க ளென்கிற இரண் டவஸ்தைகளின் பகுதி யாகச் சமயிகள் தங்கள் சித்த விகற்பத்தா லாக்கிய அறு வகைச் சமய மாகிய பிறவிப் படு குழியிலே நீ இரங் காநின்று மென்று விவேகங் கூற, அதற்கு இவ் வறு சமயங்களாகும் படுகுழி யென்றீர் இது என்னை யென்று மனங் கேட்ப, அதற்கு இங்ஙனம் கேட்டமையாற் சமயங்களின் மேலே பற்றுக்கள் நீ இன்னம் விடுத்திலையாகலின்,

வேலையா னைக் கூட் டுறு விதி யுறவையு மதை விடுவிக்குங் காவலனார் தொடர்பையு மினத் தொடருதி போலு நீ கடை நெஞ்சே எ-று,—இதுவே வேலை யாக உனக்கு உடல் கொடுக்கின்ற பிரம னாகிய உறவினையும், அவனாற் கொடுக்கப்பட்ட உடல்களை விடுவித்தலே வேலை யாக விடுவிக்கிற கூற்ற னாகிய நட்பினையும், எவ் வகைப்பட்ட பற்றுக்களையும் விடுத்துப் பிறப் பிறப்பை நீக்கு தற்கு ஏது வாய் வந்தும் இன்னமும் தொடர்கின்றனை போலும் நீ யானைக்குங் கீ ழாய நெஞ்சமே யென்று விவேகங் கூறிற்று, எ-று.

வேதாகமங்கள் கூறிய நெறி செல்வோர்க்குப் பிறப் பிறப்பு நீங்குதலே யன்றி மற்றைச் சமய நூல்கள் கூறிய நெறி செல் வோர்க்கு அவை நீங்கா வென்பது இதனாற் காண்க. "நாலு வேதமு மொரு சம னிலை" யென்பதற்கு உதாரணம்: பட்டணத்துப் பிள்ளை நாயனார். "சினந்தனை யற்றுப் பிரியமுந் தானற்றுச் செய்கை யற்று, நினைந்தது மற்று நினையா ததுமற்று நின்மலமாய்த், தனக் தனி யேயிருக் தாகத்த நித்திரை தங்குகின்ற, வனந்தலி லென் றிருப் பேனத்த னேகம்பி வாயத்தனே."(கைலாயம் 3) "சமய மாகிய படு குழியின்" என்பதற்கு உதாரணம்: தேவிகாலோத்தரம். "சமயா சாரசங் கற்பவி கற்பமு, மமையா தாங்குல வாசார மானது, விமையா தாரும்வி டாதவிவ் வாழ்க்கையு, மமையார் தோளாய் விடுதலா சாரமே." மற்றும் வருவனவற்றாற் காண்க. (14)

[இனி இந்த வுயிரைக் கொண்டு போகின்ற காலனுக்குத் தப்பிச் செல்லும் நெறி எனக்கு நீர் கூறுக என்று மநம் கேட்ப, அதற்கு விவேகம் மேற் கூறுகின்றது.]

15. நெஞ்ச மேயுட லந்தமா தியைவிடார் நிற்கமற் றையர்க்கெல்லாம், வெஞ்ச மற்குதிப் பரிதிவைக் கொருமிரு கண்டுபுத் திரன்சான்றால், அஞ்ச லிவ்வுடற் கிறுதியிற் பொழுதேனை வழியோனு மையிலனுங், தஞ்ச மென்றரன் சரண்விடே லியாழுமச் சமன்வலி தடுப்பாமே.

(பத உரை) நெஞ்சமே — நெஞ்சமே, உடல் அந்தம் — தேகாந்தத்தில், ஆதியை — (யாவர்க்கும் முதல்வனாகிய) சிவனது திருவடியை, விடார் — மறவாத பெரியோர்கள், நிற்க — நிற்க, மற்றையர்க்கு — மற்றைச் (சரியை கிரியைகளைச் செய்கின்ற) சிவர்கட்கு, எல்லாம் — எல்லாம், வெம் — கொடிது (ஆகிய), சமன் — கூற்றை, குதிப்பு — கடந்து போதல், அரிது — அரிது (என்று விவேகம் கூற, அதற்கு, அவ் வடிவை மந மொழி மெய்களினால் வழிபடுவோர்க்கும் கூற்றைக் கடத்தல் அரிது என்று கூறினர். இதற்குப் பிரமாணம் உண்டோ என்று மநம் கேட்ப,), இவைக்கு — (அதற்கு, சிவனது திருவடியைத் தேகாந்தத்தின் மறவாது பிடித்துக் கூற்றைக் கடப்பது முடியும் என்பதும், அத் திருவடியை மந மாதியால் வழிபட்டும் அவனைக் கடத்தல் அரிது என்பது மாய) இவைகளுக்கு ஒரு — ஒப்பற்ற, மிருகண்டு புத்திரன் — மிருகண்டு மா முனி புதல்வ னாகிய (மார்க்கண்டேயரே,) சான்று — சாக்ஷி (என்று விவேகம் கூற, அது எங்ஙனம் என்று மநம் கேட்ப, அதற்கு, அவர் மந மாதிகளால் வழி பட்டும் கூற்றன் வந்து பிடித்தான், அங்ஙனம் அவன் பிடித்த போது பயத்தால் மறவாது சிவனது திருவடியை அவர் பிடித்தமையால், அந்தக் கூற்றனையும் கடந்தா ராகலின், அதற்கு அவரே சாக்ஷி என்பது அறிதி என்று விவேகம் கூற, அதற்கு, திருவடியை வழி படுதலால் யான் கூற்றைக் கடக்க

லாம் என்று இருந்தேன். நீர் கூறியவாற்றால், அவனை இவ் வழி பட்டால் கடக்கக் கூடாது என்பது அறிந்து அச்ச முற்றேன். இனி அவனைக் கடத்தற்கு ஏதுவாகிய திருவடியைப் பிடிப்பதற்கு உபாயம் நீர் கூறுக என்று மநம் கேட்ப,), அஞ்சல்—(அதற்கு, நீ) அஞ்சற்க, இவ் உடற்கு—இத் தேகத்திற்கு, இறுதி—அந்தம், இப் பொழுது-இன்ன காலம், என — என்று, அறிய — (நம்மால்) உணர, ஒணாமையின் — கூடாமையால், நாளும் — (எந்) நாளும், ஆன் — (மற்றைய வினை யெல்லாம் ஒழித்துச்) சிவனது, சரண் — திருவடி, தஞ்சம்—துணை, என்று—என, விடேல்—(அதனையே) விடாது பற்றுதி, அச் சமன்—(இங்ஙனம் செய்தி எனின்) அக் கூற்றன், வலி—(நம்மைப் பிடிக்க வரும்) சாமர்த்தியத்தை, யாமும் — நாமும், தடுப்பாம் — தடுத்துக்கொள்வாம் (என்று விவேகம் கூறிற்று.) எ-று.

(இ-பு) நெஞ்சமே—விளி. ஆதி—ஆகு பெயர். விடார்—எதிர் மறைத் தெரி நிலை வினையாலணையும் பெயர். சமற் குதிப்பு—இரண்டாம் வேற்றுமைத் தொகை. சான்றால்—ஆல்—அசை. அஞ்சல்—முன்னிலை யேவல் எதிர் மறைத் தெரி நிலை வினை முற்று. என—என்ன என்பதன் இடைக் குறை. அறியொணாமையின் என்புழி அறி—அறிய என்னும் வினை யெச்சத் திறுதி தொக்கது. ஒணாமையின்—ஒண்ணாமையின் என்னும் எதிர் மறை வினை யெச்சத் திடைக் குறை. நாளும்—உம்—முற்று. விடேல்—முன்னிலை யேவல் எதிர் மறைத் தெரி நிலை வினை முற்று. விடேலியாமும்—இ—சாரியை. உம்—இறந்தது தழீஇய வெச்சம். தடுப்பாமே—ஏ—ஈற்றசை.

(சிது-ரை) நெஞ்சமே புட வந்த மாதியை விடார் நிற்க மற்றையர்க் கெல்லாம் வெஞ்சமற் குதிப் பரிது எ-று,—
தேகாந்தத்தில் யாவருக்கு முதல்வ னாகிய சிவனது திருவடியை மறவாத பெரியோர்கள் நிற்க மற்றைச் சரியை கிரியைகளைச் செய்

வென்று சொல்லப்பட்ட கொல்லாங் கோடையாகிய கூற்றைக் கடந்து போதல் அரிது என்று விவேகங் கூற, அதற்கு அவ் வடிவை மன மொழி மெய்களினுல் வழி படுவோர்க்குங் கூற்றைக் கடத்தல் அரிதாமென்று கூறினீர்; இதற்குப் பிரமாண முண்டோ வென்று மனங் கேட்ப,

இறைக் கொரு மிருகண்டு புத்திரன் சான்றல் எ-று;—அதற்குச் சிவனது திரு வடியைத் தோத்திரத்தின் மறவாது பிடித்துக் கூற்றைக் கடப்பதற்கும், அத் திரு வடியை மனமாதியால் வழிபட்டும் அவனைக் கடத்தல் அரி தென்பதற்கும், ஒப் பற்ற மிருகண்டு மா முனி புதல்வ ராகிய மார்க்கண்டேயரே சாக்ஷி யென்று விவேகங் கூற, அது எங்ஙனே மென்று மனங் கேட்ப, அதற்கு அவர் மன மாதிகளால் வழி பட்டும் கூற்றன் வந்து பிடித்தான் அங்ஙனம் அவன் பிடித்த போது பயத்தால் மறவாது சிவனது திரு வடியை அவர் பிடித்தமையால் அந்தக் கூற்றனையும் கடந்தா ராதலின் அவரே சாக்ஷி யென்பது அறிதி யென்று விவேகங் கூற, அதற்குத் திரு வடியை வழிபடுதலால் யான் கூற்றைக் கடக்கலா மென்று இருந்தேன், நீர் கூறியவாற்றல் அவனை இவ் வழிபாட்டாற் கடக்கக் கூடா தென்பது அறிந்து அச்ச முற்றேன், இனி அவனைக் கடத் தற்கு ஏதுவாகிய திரு வடியைப் பிடித்தற்கு உபாயம் நீர் கூறுக வென்று மனங் கேட்ப,

அஞ்ச லிவ் வுடற் கிறுதி யெப்பொழு தென வறியொணு மையி னுனைத் தஞ்ச மென் றரன் சரண் விடே லியாமு மச்சமன் வலி தடுப்பாமே. எ-று;—அதற்கு நீ அஞ்சற்க, இத் தேகத்திற்கு அந்தம் இந்தக் கணப்போ தென்று நம்மால் அறியக் கூடாமை யால் எக் காலும் மற்றை வினை வெல்லா மொழித்துச் சிவனது திரு வடி தஞ்ச மென்று அதனையே விடாது பற்றுதி, இங்ஙனஞ் செய்தி யெனின் அந்தக் கூற்றன் நம்மைப் பிடிக்க வருஞ் சாமர்த்தியத்தை யாமும் தடுத்துக் கொள்வா மென்று விவேகங் கூறிற்று, எ-று.

தஞ்சம்-பற்றுக்கோடு. இதற்கு உதாரணம்: பெருந் திரட்டு. "வில்வி ளங்கிய விண்ணவர் மிகுத்தவாழ் நாளு, மல்வி ரும்பக லன்னுமீர் வாளினு லரிந்து, கொல்லும் வெங்கொடுங் கூற்றை யார் குலைவுறார் குறுகி, னல்வி ருக்கென வுவந்தெதிர் கொள்ளு மான் ஞாதி" என்றும், திரு வள்ளுவர். "வேண்டுதல் வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க், கியாண்டு மிடும்பை யில" என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க. (15)

[ இப் போது பெற்ற இச் காயத்தின்கண் நின்று ஒரு தலை மாகத் திரு வடியை மறவாது பிடிக்க வேண்டும் என்று இன்னும் வற்புறுத்துதல் மேற் கூறுகின்றது. ]

16. தடுத்து மேலுமிவ் வுருவமாயி னும்பெறல் சற்றல மறைநாகத், திடத்தின் மாதவ ரிருவர்கங் கேனவடைந் திருத்தல்சான் றரிதாகிக், கிடைத்த தேகமும் விவேகமு மிருக்குஞான் றேகிரீ சனேநெஞ்சே, யடுத்தி லாய்பல கவலை மாய்த் தோருணர் வாகிநின் றகலாதே.

(பத உரை) தடுத்து—(இத் தேகத்தை) விட்டு, மேலும்—இனியும், இவ் உருவம்—இம் மானுட தேகம், ஆயினும்—ஆயினும், பெறல்—பெறுதல், சற்று—எளிது, அல—அன்று (என்று விவேகம் கூற, அதற்கு, இம் மானுட தேகமா யினும் பெறல் அரிது என்று மிகவும் அருமைப் படுத்திக் கூறுகின்றீர். இது கிடைப்பது அரிது என்பதற்கு ஒரு சாக்ஷிப் பிரமாணம் உண்டோ? என்று மனம் கேட்ப,) இருவர் மாதவர்—(அதற்கு, சம்பாச் சம்பாதி என்னும்) இரண்டு முனிவரும் (புத்தியை விரும்பி மேலாகிய தவத்தினைப் பண்ண, அதனாற் சிவன் வந்து தோன்றி, "உமக்கு என்ன வேண் டியது" என்று கேட்ப, அதற்கு, தாம் கருதிய அதனை மறைத்து, "முத்தி வேண்டும்" என்று கேட்ப, அதற்கு, "நீர் கருதியது ஒன்றும், நம்மைக் கேட்பது மற் றொன்றுமோ" என்று திரு வுள்

னத்தின் முனிவு செய்து சாபம் கொடுத்தருள, அதனால், அவ் விருவோரும்) மறை நாகத் திடத்தின்—வேத கிரியின்கண்ணே, கந்து—கழுது, என—என்று சொல்லும்படி, அடைந்து இருந்தேன்—(கிருத யுக முதல் இக்கலியுக மளவும் இத் தேகம் கிடையாது இன்றும்) பொருந்தி இருந்தபிலே, சான்று—சாக்ஷி (என்று விவே கம் கூற, அதற்கு, விறை வேறு இன்றி மநம் சும்மா இருப்ப), அரிது ஆகி—(ஆகலின், மநமே!) அரிதாய், கிடைத்த—கிடைக்கப் பெற்ற, தேகமும்—(இந்த மானுட) சரீரமும், விவேகமும்—(இத னால், தன்னைத் தலைவனை அறிய வருகிற அந்த ஆகிய) ஆராய்வும், இருக்கும்—இருக்கிற, ஞான்றே—இக் காலத்திற் றானே, பல—(தேக போகங்களைக் கருதுகின்ற) பல (வேறு வகைப்பட்ட), கவலை—கவலைகளையும், மாய்த்து—கெடுத்து, ஓர்—ஒரு, உணர்வு—அறிவு, ஆகி—ஆய், நின்று—நிலைத்து, கிரிசகனை—கைலயங்கிரி வாசனாகிய சிவனது திரு வடியை, அகலாது—(விட்டு) நீங்காது, அடுத்திலாய்—(நீ) அடைந்தா யில்லை, நெஞ்சே—நெஞ்சமே (நின் கருத்து இருந்தது என்னை? என்று விவேகம் கூறிற்று.) எ-று.

(இ-பு) மேனும் - உம் - இறந்தது தழீஇயது. உருவாயினும் - உம் - உயர்வு சிறப்பு. சற்றல - அல - அஃறிணைப் பலவின் பால் எதிர் மறைக் குறிப்பு வினை முற்று. அது ஈண்டு ஒருமை யிற் பன்மை மயக்கம். தேகமும் விவேகமும் - உம் - இரண்டும் எண்ணும் பொருளன. ஞான்றே - ஏ - பிரி நிலை. நெஞ்சே - விளி. அடுத்திலாய் - முன்னிலை யேவல் எதிர் மறைத் தெரி நிலை வினை முற்று. அகலாது அடுத்திலாய்.

(சீ-ரை) கழித்து மேலு மிவ் வுருவ மாயினும் பெறல் சற் றல எ-று,—இத் தேகத்தை விட்டு இனி மேல் இம் மானுட தேக மாயினும் பெறல் எளி தன் றென்று விவேகங் கூற, அதற்கு இம் மானுட தேக மாயினும் பெறுதல் அரி தென்று மிகவும் அருமைப் படுத்திக் கூறுகின்றீர்; இது கிடைப்பது அரி தென்

...ரன் மற்றதுகொண், டக்கோதன் மெய்யை யரிந்தான்போன். பக்கவுடல், கொண்டுமுத்தி செல்லுங்கு நீப்பின்றிச் சிற்றின்பங், சன்முவினைக் காணாக்க ணைக்கு.", "விவேகமு மிருக்கு ஞான்றே" என்பதற்கு உதாரணம்: ஞான வாசிட்டம். "வைகிறு வரையுண் ணும் பக்குவோனைக் காலனு வரையுண்டு கணக்கிலாத, மெய் யிலே புகுந்தனுந்த விவேகம்பெற்றும் விரகிலோர் சிலர்பிறப்பின் மீண்டும்வீழ்ந்தார், உடம்பினுள் மூன்றுலகாம் பணிசெய்து வருகின்றும் போகாது வளர்ந்துவாளா, பொய்யினுள் மிகவிரியும் வேலையூடே பொருதிரைபோற் பாபதத்தே புரிந்தமாயை." (4-430) மற்றும் வருவனவற்றாற் காண்க. (16)

[ இங்ஙனம் சத்தப் பிரமாணத்தாலும், காகுஷிப் பிரமாணத் தாலும், இக் காயம் கிடைத்தற்கு அரிது என்று அறிவிக்க, அதிந்து மநம் சம்மதிப்ப, இனித் திரு வடியைத் தாமதம் பண்ணு மல் விரைந்து நினைத்தற்கு மேற் கூறுகின்றது. ]

17. அகலு மிவ்வுடன் மினின்விரைந் தெனின்விரைந் தரற்றொழு தலதிங்கே, சகல முஞ்செய நினைகுத றினையினித் தடப்புன லிதுவென்றே, பகலி னுல்விரி கானலை நேஞ்சமே கருதிநேற் பயிராதி, இகலி னுற்செய நினைபவர் நினைவை யொத் திடுமேன விடுவாயே.

(பத உரை) மினின்—(மேகத்தின்கண் தோன்றி அழியும்) மின்னல் போல, விரைந்து—அதி சீக்கிர மாக, அகலும்—(மாயையின் கண் தோன்றிக் கண காலத்து) அழியும், இவ் வுடல்—இந்த உடலம், எனின்—என்றால், விரைந்து—(இஃது உள்ள போதே) அதி சீக்கிர மாக, அரன்—சிவனது (திரு வடியை), தொழு—வணங்குதி, ஈது— (இத் திரு வடியை இடைவிடாது) வணங்குதல், அலது—அன்றிப் (பொய் யாகிய பிரபஞ்சத்தை மெய் யாகக் கருதிக் கொண்டு), இங்கு—இப் பிரபஞ்சத் தன்ன, சகலமும்—அறு வகைத் தொழிலையும்,

செட—செய்ய, நினைகுதல்தனை—(தொடங்க) எண்ணுவதை, பகலி றல்—சூரிய கிரணத்தினால், விரி—(பொய்யாய்) விரிகின்ற, கானலை—கானல் சலத்தை, தட புனல்—(மெய்யான) தடாக சலம், இது—ஈது, என்று—என்பதாக, கருதி—எண்ணி, செல் ஆதி—செல் முதலிய, பயிர்—பைங் கூழினை, இகலினால்—(தமது) சாமர்த்தியத்தால், செய—(உண்டாக்குதல்) செய்ய, நினைபவர்—(அறியாமையால்) கருதுவாரது, நினைவை—கருத்தை, ஒத்திடும்—போலும். என—(என் கருத்தும்) என (அறிந்து), நெஞ்சமே—மனமே, இனி விடுவாய்—இனி விடு வாயாக (என்று விவேகம் கூறிற்று.) எ-று.

(இ-பு) மினின், எனின், அலது, செய - இவை முறையே மின்னின், என்னின், அல்லது, செய்ய என்பவற்றின் இடைக் குறைகள். மினின் - இன் - உவம உருபு. எனின் - இன் - வினை எச்ச விகுதி. அரன் - ஈண்டு ஆகு பெயர். ஈது - நீண்ட சுட்டு. சகலமும் - உம் - முற்று. நினைகுதல்தனை - கு - தன் - சாரியைகள். என்றே - ஏ - அசை நிலை. நெஞ்சமே - விளி. நினைபவர் - தெரி நிலை வினையா லணையும் பெயர். ஒத்திடும் - இடு - பகுதிப் பொருள் விகுதி. விடுவாயே - ஏ - ஈற்றசை. சகலமுஞ் செய நினைகுதல் ராய் எனக் கூட்டுக.

(சித-ரை) அகலு மிவ் வுடல் மினின் விரைந் தெனின் விரைந் தாற் றொழு எ-து,— மேகத்தின்கண் தோன்றி நின்று அழியும் மின்னல் போல மாயையின்கண் தோன்றிக் கண காலத்து அழியும் இந்த உடல மென்றால் இஃது உள்ள போதே அதிசீக்கிர மாகச் சிவனது திரு வடியை வணங்குதி,

ஈதல திங்கே சகலமுஞ் செய நினைகுத றனை எ-து,—இத் திரு வடியை இடைவிடாது வணங்குத லன்றிப் பொய் யாகிய பிர பஞ்சத்தை மெய் யாகக் கருதிக்கொண்டு இப் பிரபஞ்சத் துள்ள அறு வகைத் தொழிலையுஞ் செய்யத் தொடங்குவதை,

நீடாக் கடற் புனலிது என்றே பகலினுள் விரி கானலை நெஞ்சமே கருதி நெற் பயிராதி விளைவிற்றுச் செய நினைபவர் நினைவை யொத்திடு மென விடுவாயே எ-று,—சூரிய கிரணத்தாற் பொய்யாய் மின்கின்ற கானற் சலத்தை மெய் யான தடாக சலமீ தென்று கருதி நெற் பயிர் முதலிய பைங் கூழினைத் தமது சாமர்த்தியத்தால் உண்டாக்குதல் செய்ய அறியாமையாற் கருதுவாரது கருத்தைப் போலும், என் கருத்தும் எனை அறிந்து நெஞ்சமே இனி விடுப்பா யாக வென்று விவேகங் கூறுகிறது, எ-று.

சூரிய கிரணத்தாற் பொய்யாக் போலச், சிவத்தை விட்டு நீங்காத அபின்ன சக்தியாற் பின்ன சத்தி பொய் யாய்த் தோன்றுதலின், இப் பின்ன சத்தி காரிய மாகிய பிரபஞ்சம் கானற் சலத்தி னிழல் போலப் பொய் யெனக் கூறப் பட்டது. கானற் சலத்தைப் பொய் யென்று அறிந்தவன் பைங் கூழ் செய்ய நினையாமை போலப், பிரபஞ்சத்தைப் பொய் யென்று அறிந்தவன் இப் பிரபஞ்சத் தொழில்களின் முயலான் என்பது அறிக. "அகலு மிங்குடன்" என்பதற்கு உதாரணம்: குறுந் திரட்டு "காயமீர்ங் குமிழி யதிலுறு மின்பங் கானலிற் புனலிது தனக்கிங், காயமித் துயரா னாவிலே யிதைநீ யாய்வுறு மெயிலழிக் கற்றாய், சீயெனக் கலிலே நினைவெலா மொழித்து நெஞ்சமே வந்தெனக் கூடன்பட், டாயகற் சொரூபர்க் கன்பதே யிசைந்தா லரியதே தார் நமக் கெதிரே.", "பிரபஞ்சம் பொய்" யென்பதற்கு உதாரணம்: திருவாசகம். "பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக்கருதிப், பேய்த்தேர் முகக்குறும் பேதைகுண மாகாமே, தீர்த்தாய் திகழ் தில்லை யம்பலத்தே திருநட்டஞ்செய், கூத்தாவுன் சேவடி கூடும் வண்ணந் தோணோக்கம்" (தோணோக்கம் 11) மற்றும் வருவன வற்றுற் காண்க. (17)

[ பிரபஞ்சம் பொய் என்பதும், திருவடி மெய் என்பதும், இங்ஙனம் நீ அறிவிக்க ஐயம் இன்றி நன்று உணர்ந்தேன்.

“உமது கிருபையை என் என்று உரைப்பேன்” என்று மநம் கூற, அதற்கு, ஞாந சமாதி கூடுதற்கு மநத்தை உடன்படுத்தி மேற் கூறுகின்றது.]

18. வாய்மை யீதுணர்ந் திடுதிநன் னெஞ்சமே வரு கணத் தேதேனு, நீநி னைந்திடே லவ்வள வுடலுற னிச்சயிப் பரிதத்தாற், போய தோர்கணச் செயலுனேல் பயனிலை புகனி கழ் கணத்தேனுந். தீமை நன்மைநீ நினைவதேன் வினை வழிச் சிவன்றரு குதலாலே.

(பத உரை) நல் — (யான் கூறிய நன் மார்க்க நெறியே சென்று எனக்கு நன்மை தருகின்ற) நல்ல, நெஞ்சமே—மநமே, வாய்மை—உண்மை (யாகிய), ஈது—இதனையும், உணர்ந்திடுதி—(நீ) அறிவாய், நீ—நீ, வரு—(ஞாந நிட்டை கூடுமிடத்து ஒரு கணப் போதாயினும் அந் நிட்டையில் நீங்காது இருக்கவேண்டும் ஆகலின்) வரும், கணத்து—(காலங்களில்) கணப் போ தாயினும், ஏதேனும்—யா தொன்றனையும், நினைந்திடேல்—கருதிச் செல்லற்க, அவ்வளவு—அக் கணப் போ தளவும், உடல்—(இவ்) வுடம்பு, உறல்—(உயிரோடு) இருத்தலை, நிச்சயிப்பது—நிச்சயம் பண்ணல், அரிது—கூடாது, அத்தால்—அதனால், போயது—சென்ற காலத்து, செயல்—(நிகழ்ந்த) செய்கைகளை, ஓர் — ஒரு, கணம் — கணப் போ தாயினும், உனேல்—கருதற்க, பயன்—(அதனால்) பயன், இலை—(ஒன்றும்) இல்லை (என்று விவேகம் கூற, அதற்கு வருங் காலம் சென்ற காலங்களில் “ஒன்றையும் நினையேல்” என்று கூறி னீர். இஃது உண்மை. நிகழ் காலத்து, “அங்க பாகாதிகளைக் குறித்தாயினும் நினைக்கலாகாதோ” என்று மநம் கேட்ப), புகல்—(அதற்கு,) உன்னால் சொல்லப்பட்ட, நிகழ்—நிகழ் (காலத்தில்), கணத்தேனும் — கணப் போ தாயினும், நீ — நீ, நன்மை — சுக, தீமை—துக்கங்களை, நினைவது—கருதுவது, என்—என்னை, வினை—(நமது) நல் வினை தீ வினைகளை (அறிந்து அவற்றின்), வழி—படியே;

சிவன்—சிவபெருமான் (உடையனாகிய சுக துக்கங்களை, தருந்தகையான் — (நமக்கு) அருத்துவிக்குந்தலைவன் (என்று விசேடம் கூறற்பாற்று.) எ-று.

(இ-பு) ஈது - நீண்ட சுட்டு. உணர்த்திடுதி - இடு - பகுதிப் பொருள் விகுதி. நெஞ்சமே - விளி. வரேனும் - உம் - முற்று. நினைத்திடேல் - இடு - பகுதிப் பொருள் விகுதி. ஏல் - எதிர் மறை ஏவல் வினை விகுதி. அப்போது - அந் நினைக் காலத்தைக் குறித்தது, உறக்கம், நிச்சயிப்பது - இவை தொழிற் பெயர்கள். அத்தால் - அத்து - அது என்னும் சுட்டுப் பெயர் இடையில் ஒற்று இரட்டித்தது. போவது - தெரி நிலை வினையாலணையும் பெயர். உனேல் - உன்னேல் என்னும் எதிர் மறைத் தெரி நிலை ஏவல் வினை முற்றின் இடைக் குறை. இலை - 'இல்லை' என்னும் எதிர் மறைக் குறிப்பு வினை முற்றின் இடைக் குறை. புகல் - 'புகலப்பட்ட' என்னும் செயப்பாட்டு வினை எச்ச உருபுக்கள் தொகப் பெற்று முதனிலை மாத்திர மாக நின்றது. கனைத்தேனும் - உம் - இறந்தது தழீஇயது. நினைவது - தொழிற் பெயர். நன்மை தீமைகள் - ஆகு பெயராய், அவற்றின் காரிய மாகிய சுக துக்கங்களைக் குறிக்கும். என் - 'என்ன' என்னும் வினா வினைக் குறிப்பு முற்றின் விகாரம். தருந்தலைவனே - கு - சாரியை. ஏ - ஈற்றசை.

(பொ-ரை) வாய்மை யீ துணர்த் திடுதி நன் னெஞ்சமே எ-து,—யான் கூறிய நன் மார்க்க நெறியே சென்று எனக்கு நன்மை தருகின்ற நல்ல நெஞ்சமே உண்மை யாகிய இதனையும் நீ அறிவாய்,

வரு கனைத் தேனும் நீ நினைத்திடேல் வல்வளை வுட லூற நிச்சயிப் பரி தத்தால், எ-து,—நீ ஞான நிட்டை கூடுமிடத்து ஓர் கணப் போதாயினும் அந் நிட்டையின் நீங்காது இருக்க வேண்டு மாதலின் வருங் காலங்களிற் கணப் போதாயினும் யாதொன்றனையுங் கருதிச் செல்லற்க, அக் கணப் போதளவும் இவ் வுடல் இருத்தற்கு நிச்சயம் பண்ணக்கூடாது அதனால்,

போயதோர் சமயச் செய லினேன் டப் ளிஃ எ-து.— சென்ற காலத்து ஓர் கணப் போ தாயினும் இன்னது செய்யாது இருந்தேன் என்று கருதற்க, அதனுற் பயன் ஒன்று மில்லை யென்று விவேகங் கூற, அதற்கு வருங் காலஞ் சென்ற காலங்களில் ஒன்றையும் நினையே லென்று கூறினீர், இஃ தன்மை; நிகழ் காலத்து அந்த பாராதிகளைக் குறித் தாயினும் நினைக்கலாகாதோ வென்று மனங் கேட்ப,

புக னிகழ் கணத்தேனுந் தீமை நன்மை நீ நினைவ தென் வினை வழிச் சிவன் றருகுதலாலே எ-து,— அதற்குச் சொல்லப் பட்ட நிகழ் காலத்திற் கணப் போ தாயினும் நீ சுக துக்கங்களை நினைவது என்னை, நமது நல் வினை தீ வினைகளின்படியே சிவன் அறிந்து சுக துக்கங்களை நமக்கு அருத்துதலால் என்று விவேகங் கூறிற்று, எ-று.

இதற்கு உதாரணம்: திருவள்ளுவ நாயனுர்; "ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப, கோடியு மல்லப பல." (347) என்றும். ஔவையார் நல் வழி, "உண்பது நாழி யுடுப்பது நான்குமுழ, மெண்பது கோடிநினைந் தெண்ணுவன - கண்புதைந்த, மாந்தர் குடி வாழ்க்கை மண்ணின் கலம்போலச், சாந்துணையுஞ் சஞ்சலமே தான்" (28) என்றும், மற்றும் வருவனவற்றுற் காண்க. (18)

[ பிரிய விடயங்கள் வர வேண்டும் என்று கருதாது இருத் தற்கும், வந்த விடயங்களின் மேல் ஆசை செல்லாது திரு வடியை மறவாது இருத்தற்கும், மேல் உபாயம் கூறுகின்றது. ]

19. தருவ தீமையி னன்மையு மூழடுத் ததையுயர் கழைமேனின், றுரைக ளாதிசெய் கூத்தரிற் பிறனைச் சோருமக டவனேவல், புரித றன்னினைம் பொறிகளாற் பற்றி னும் புகனிரா சையையீயுற், றிரவி னும்பக லினும்விடே னெஞ்சமே யின்பவீ டெளிதாமே.

ஆக்கும்—உண்டாக்கும், வித்து ஆய்—(ஒரு) விதை யாய், என—என்று (கருதி), நீ மதித்திடு—நீ அந்த அவாவை நின்கண் முளைக்கும் தோறும் அதனை விவேகத்தாலே பார்த்து நீ தடுத்தல் செய், ஆசை—(அங்ஙனம் செய்தியேற் கண்ட விஷயங்களை யிச்சிக்கும்) ஆசை யாகிய, கடல்—சமுத்திரம், சவறும்—வற்றும், நினைவு—(அக் கடல் வற்றவே பிற விஷயங்களிற் செல்லும்) எண்ணம், எனும்—என்கின்ற, திரை—அலை, மாயும்—நாச மாம், நினைவும்—(அந் நினைவு எனும் திரை நாச மாகவே, முன்னர் இந்திரியங்களாற் கண்டு மனத் தின்கண் எழுப்பிருக்க விஷய வாசனை அதனோ லாய்) நினைவு. எல்லாம்—எல்லாம், இறந்து போம்—(ஒருங்கே) இறந்து போம், எப் பொழுதில்—(அந் நினைவு எல்லாம்) எப் பொழுது இறந்தனவோ. அப் பொழுது—அப் பொழுது தானே, சோம சேகரத்து—சந்திர சூடன் ஆகிய, எந்தை—எமது தந்தையினது, பூரணம் ஆய—பரி பூரண மாகிய, பொன்-பொன் போன்ற, கழலையும்-திரு வடியையும், நாம்—யாம், தொழல்—தொழுதற்கு, ஐயம்—சந்தேகம், இலை—இன்று (என்று விவேகம் கூறிற்று.) எ-று.

உடல் விட்டு உயிர் நீங்குங்கால் யாது ஓர் அவாத் தோன்றிற்று, அவ் வவாவின் வழித் தாய்ச் சென்று உயிர் பிறத்தலின், அவாப் பிறப்பிற்கு வித்து எனப்பட்டது. பகவற்கீதை எட்டாவது அத்யாயம் எழு வகை வினு வுரைத்தல்-6வது பாட்டு, "இந்த வுடலம் விடும்பொழுது யாவன் யாதொன் றினைநினைத்தான், அந்த வளவே வந்தப்பா வினையா லதனை யடையுமால், எந்த னியல்பே யெப் பொழுது மிதயத் திடைகொண் டென்பாலாஞ், சிந்தை யொடுங்கா ளமர்தொடங்கி லதனு வெனையே சேருதியால்". (8-6) என்னும் பகவற் கீதைப் பிரமாணத்தால் உணர்க.

(இ-பு) இச்சையே-ஏ-பிரிநிலையும், தேற்றமு மாம். மேலும் மேலும்-இவ் வுடற்கு, பிறப்பின் தொடர்ச்சியைக் குறித்து நின்றது. உம்-இரண்டும் இறந்தது தழீஇயன. நெஞ்சே-விளி. மதித்திடு-

...மாதுப் பறப்பினும் விந்து." (73-1) எனவும், "ஆசைக் கடல் ...ழுறிடை கீழே வெனுந் திரை மாயம்" என்பதற்கு உதாரணம்: பூரணாசிட்டம். "இச்சையாம் விநகு மாண்டா லெண்ணமாம் ...ணீ மாளு, நிச்சய மாகுந் தேயத் தியாகமாம் நெருங்கே சேறு, பயச்சிட வுதாரக் கண்ணுறல் வேட்கையான் மகவும் வாடுங், ...ரார்ச்சைசுறா வதனத நோக்கிக் குறைவற விருப்பாய் திரா." (53-4) எனவும், மற்றும் வருவன வற்றுற் காண்க. (20)

[நினைவுகள் யாவும் இறந்து போக வேண்டும் என்று கூறி னர். சிவ பூசை முதலிய சற் கருமங்கள் ஆயினும் செய்ய வேண்டாவோ என்று மநம் கேட்ப, அதற்கு, மேற் கூறுகின்றது.]

21. நாம ரற்கருச் சனைமுத லியகோடு நலஞ்செய்தே மவையின்றித், தீமை செய்துளே மெனவுமுன் னிலையொரு சிறிதசை வடைந்தாலும், யாமி யற்றப ராதமென் னினைவுமற் றசைகிலை யெனினெஞ்சே, யேம மிக்குறச் செய்யுநன் கிறை கழற் கேனத்துணிந் திடுவீயே.

(பத உரை) நாம்—யாம், அரற்கு—(இன்றைறக்குச்) சிவனது திரு வடிக்கு, அருச்சனை—(திரு மஞ்சன பத்திர புஷ்பங்களாற் செய்யும்) அருச்சனை, முதலிய—முதலிய (உபசாரங்களை), கொடு—கொண்டு, நலம்—நன்மை, செய்தேம்—செய்தேம் (என்றும்), அவை—(இன்றைறக்கு) அவை, இன்றி—(செய்குதல்) இன்மையால், தீமை—தீமை, செய்துளேம்—செய்தேம், எனவும் — என்றும், உன்—(இங்ஙனம் கருதுதலைப் பற்றி) உனது, நிலை—நிலையானது, ஒரு சிறிது—கொஞ்சம், அசைவு—சலனத்தை, அடைந்தாலும்—பொருந்தினாலும், யாம்—நாம், இயற்று—(அத் திரு வடிக்குச்) செய்யும், அபராதம்—குற்றம் (அதுவே யாம் என்று விவேகம் கூறு), என்—(அதற்கு, பூசை செய்தேன் செய்கின்றிலேன் என்னு நினைவு சிவனுக்கு அபராதம் செய்தல்) என்னை (என்று மநம்

கேட்ட, அதற்கு) ஈது என்று சுட்டி யறியக் கூடாத சிவத்தைச் சுட்டி யறிதலே அபராதஞ் செய்தல் என்று விவேகங் கூற, அதற்கு, அங்ஙனஞ் சுட்டாமற் சிவத்தை அறிதற்கு உபாயம் எங்ஙனம் என்று மனங் கேட்ப,). நினைவும் அற்று—(அதற்கு, நீர் அணு வளவாயினும் ஒன்றைச் சுட்டி) எழுகின்ற கருத்தும் ஒழிந்து, அசைவிலா—(ஒரு சிறிதும்) அசைவின்றி நிற்பை, எனின்—ஆயின், இறை—(இதுவே சிவனது, கழற்கு—திருவடிக்கு. இன்பம்—இன்பம், மிக்குற—மிகுந்துற, நன்கு—நன்றாக. செய்பு—செய்யப்படும், என—(பூசை) என்று, நெஞ்சமே—நெஞ்சமே!, நீ—நீ, துணிந்திடு—நிச்சயித்து அறி (என்று விவேகங் கூறிற்று.) எ-று.

(இ-பு) அரற்கு-என்பது ஆகு பெயராய் அரனது திருவடியைக் குறித்தது. முதலிய-குறிப்பு வினையா லணையும் பெயர். கொடு-'கொண்டு' என்பத னிடைக் குறை. எனவும்-உம்-இறந்தது தழீஇயது. ஒரு சிறிது-என்பது ஒரு சொன் னீர் மைத் தாய், அற்பம் என்னும் பொருள் தந்தது. அடைந்தாலும்-உம்-அடைதல் கூடாது எனப் பொருள் தருதலின் எதிர் மறை. என்-'என்ன' என்னும் வினா வினைக் குறிப்பு முற்றின் விகாரம். நினைவும்-உம்-இறந்தது தழீஇயது. நெஞ்சே-விளி. நீயே-ஏ-ஈற் றசை.

(சித-ரை) அரற் கருச்சனை முதலிய கொடு நலஞ் செய்தே மவையின்றித் தீமை செய்துமே னெனவு முன் னினை வொரு சிறிது தனை யடைந்தாலும் யாமியற் றபராதம், எ-று;— யாம் இன்றைக் குச் சிவனது திருவடிக்குத் திரு மஞ்சன பத்திர புஷ்பங்களாற் செய்யும் அருச்சனை முதலிய உபசாரங்களைக் கொண்டு நன்மை செய்தே மெனவும், இன்றைக்கு அவை செய்குதல் இன்மையால் தீமை செய்தே மெனவும், இங்ஙனங் கருதுதலைப் பற்றி உனது நினைவு சிறிதோ ரசைவு பொருந்திற் றாயினும் அத் திருவடிக்குச் செய்யும் அபராதம் அதுவேயா மென்று விவேகங் கூற,

...ள எ-து;—அதற்குப் பூசை செய்தேன் செய்கின்றிலே னென்று நினைவு சிவனுக்கு அபராதஞ் செய்தல் என்னை யென்று ...க் கேட்ப, அதற்கு ஈதென்று சுட்டி யறியக் கூடாத சிவத்தைச் சுட்டி யறிதலே அபராதஞ் செய்தல் என்று விவேகங் கூற, அதற்கு அங்ஙனஞ் சுட்டாமற் சிவத்தை யறிதற்கு உபாயம் எங்ஙனே யென்று ...க் கேட்ப,

...வினைவு பற் றனைத்தில டெனி னெஞ்சே மெய்ய மக்குறச் செய்யு நன் கிறை கழற் கெனத் துணிந்திடு நீயே எ-து,—அதற்கு ...ஞானு ளவாயினும் ஒன்றைச் சுட்டி யெழுந்து அசையாது நிற்றி யெனின், இதுவே திரு வடிக்கு இன்ப மிகுந்துறச் செய்யும் பூசை யென நீ நெஞ்சமே நிச்சயித்து அறிதி யென்று விவேகங் கூறிற்று, எ-று.

தானு முருவமா யிருந்து கொண்டு சிவனையும் ஓ ருரு வாகக் கண்டு அருச்சனை பண்ணுதல் கற்பனை யாகலின் இது அபராத மென்றும், தான் அறி வாய் நின்று அறிவிற்கு அறி வாகிய சிவத்தின் கண் அசைவற நிற்றல் உண்மையாகலின் இதுவே பூசை யென்றுங் கூறப்பட்டன. இதற்கு உதாரணம்: ஆகமத் திரட்டு. "எப் பொருள் கலந்தா னாகி யிலங்கிடப் படுவா னீச, னப்படி விளங்கு கின்ற தறிதலே யவன்ற னக்கு, மெய்ப்படு பூசை வேறோர் செயலினா லன்று மெய்யே, யிப்படி ஞானந் தன்னா லிறைஞ்சிடப் படுவா னீசன்." எனவும், மற்றும் வருவனவற்றாற் காண்க.

**[இங்ஙனம் அசைவற நிற்றல் எங்ஙனக் கூடாது, சிவன் இங்ஙனம் இருப்பான் என்று தியானம் செய்கின்றேன் என்று கூறிய மதத்தைப் பார்த்து மேற் கூறுகின்றது.]**

**22. நீமெய்ஞ் ஞானநன் னிட்டைசா ருதலரி தெனவு
நெஞ் சகமேசற், றேய்வி லாதுசெய் தியானமா திகளெளி**

